தமிழகத்தில் பல வருடங்கள் பக்தி பரவசத்துடன் ஓதிவரும் சுப்ஹான் மவ்லிதின் வரிகள் இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைக்கு முரணாக அமைந்துள்ளது என்று நாம் பலவருடங்களாக கூறிவருகிறோம். நம் கருத்துக்கு எதிர் கருத்துக் கூறுபவர்கள் நாம் தவறான அர்த்தம் அதற்கு கொடுப்பதாக குற்றம் சுமத்தினர். எனவே சுப்ஹான மவ்லிதின் சரியான பொருளை அவர்களைச் சார்ந்த- மவ்லித் ஓத வேண்டும் என்று வலியுறுத்தும் தேங்கை சர்புத்தீன் என்ற மவ்லவி எழுதிய சுந்தரத் தமிழில் சுப்ஹான மவ்லித் என்ற புத்தகத்திலிருந்து மொழிபெயர்ப்பை எடுத்து எழுதியுள்ளோம். அதோடு அந்த மவ்லித் வாரிகளுக்கு எதிர் கருத்து கூறும் திருக்குர்ஆன் நபிமொழிகளை மட்டும் நாம் எடுத்தொழுதியுள்ளோம். அதில் நம் கருத்துக்களை சேர்க்கவில்லை. மவ்லித் ஓதினால் நன்மையுண்டு என்று எண்ணுபவர்கள் அதன் உண்மை நிலை இதன் மூலம் தெளிவாக தெரிந்து கொள்ள முடியும்.

1

**மவ்லித் வரிகள்**

اَلسَّلام عَلَيْكَ يَا مَاحِي الذُّنُوْبِ      اَلسَّلَامُ عَلَيْكَ يَا جَالِي الْكُرُوْبِ

பாவங்களை அழிப்பவரே! நும் மீது ஸலாம் !

கவலைகளை அகற்றுபவரே! நும் மீது ஸலாம் !

اَنْتَ غَفَّارُ الْخَطَايَا      وَالذُّنُوْبِ الْمُوْبِقَاتِ

இழிவூட்டும் சிறுபிழைகள் யாவும் பொறுப்பது தாங்களன்றோ,

அழிவேற்படுத்தும் வன்பிழைகள் அனைத்தும் பொறுப்பது தாங்களன்றோ

كَفِّرُوْا عَنِّيْ ذُنُوْبِيْ   وَاعْفُ لِيْ عَنْ سَيِّئَاتِ

என்னில் நிகழும் பெரும் பிழைகள் யாவையும் மன்னித் தருள்வீரே!

சின்னஞ் சிறிய தீமைகளை சீராய் பொறுத்தருள் புரிபவரே!

**குர்ஆன் வரிகள்**

அல்லாஹ்வைத் தவிர பாவங்களை மன்னிப்பவன் யார்? (அல்குர்ஆன் 3:135) தமக்கு எதிராக வரம்பு மீறிய எனது அடியார்களே! அல்லாஹ்வின் அருளில் நம்பிக்கையிழந்து விடாதீர்கள்! அல்லாஹ் பாவங்கள் அனைத்தையும் மன்னிப்பான். அவன் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன் என்று (அல்லாஹ் கூறுவதைத்) தெரிவிப்பீராக! (அல்குர்ஆன் 39:53) எங்கள் இறைவா! எங்கள் பாவங்களை மன்னிப்பாயாக! எங்கள் தீமைகளை எங்களை விட்டு அழிப்பாயாக! நல்லோருடன் எங்களைக் கைப்பற்றுவாயாக!” (அல்குர்ஆன் 3:193)

**2**

**மவ்லித் வரிகள்**

يَا مَنْ تَمَادى وَاجْتَرَمْ تُبْ وَاعْتَرِفْ وَارْجُ الْكَرَمْ
وَلُذْ بِمَنْ حَلَّ الْحَرَمْ وَنُوْرُهُ عَمَّ الْبِلَادِ

பாவத்தில் நீடித்திருப்பவனே! குற்றம் இழைத்துவிட்டவனே! நீ பாவமன்னிப்புக் கேள்! உன் குற்றத்தை ஒப்புக் கொள்!

நபியின் கொடைத்தன்மையை எதிர்பாத்துக் கொள்!

புனிதம் மிக்க ஹரம் ஷரீபின் பொன்னடி பதித்த பூமான் நபியிடம் புகலிடம் தேடிக் கொள். அவர்களின் பேரொளி அனைத்து நாடுகளையும் பொதுவாகச் சூழ்ந்து கொண்டது.

**குர்ஆன் வரிகள்**

அல்லாஹ்விடமிருந்து என்னை எவரும் காப்பாற்றமாட்டார். அவனன்றி ஒதுங்குமிடத்தையும் காணமாட்டேன்” என்றும் கூறுவீராக! (அல்குர்ஆன் 72 : 22)

அவர்கள் வெட்கக்கேடானதைச் செய்தாலோ, தமக்குத் தாமே தீங்கு இழைத்துக் கொண்டாலோ அல்லாஹ்வை நினைத்து தமது பாவங்களுக்கு மன்னிப்புத் தேடுவார்கள். அல்லாஹ்வைத் தவிர பாவங்களை மன்னிப்பவன் யார்? தாங்கள் செய்ததில் தெரிந்து கொண்டே அவர்கள் நிலைத்திருக்க மாட்டார்கள். (அல்குர்ஆன் 3 : 135)

**3**

**மவ்லித் வரிகள்**

حُبُّكُمْ فِيْ قَلْبِنَا مَحْوٌ مِنْ رَّيْنَ الذَّنْبِ وَالْحَرَج
صَبُّكُمْ وَاللهِ لَمْ يَخِبِ لِكَمَالِ الْحُسَنِ وَالْبَهَج

தங்களின்பால் நாங்கள் வைத்திருக்கும் நேசம் எங்களின் இதயத்திலிருக்கிறது.

இது எங்களின் பாவக் கறைகளிலிருந்தும் குற்றத்திலிருந்தும் உள்ளவற்றை அழித்துவிடும்.

தங்களின் நேசன் முழுமையான அழகையும் ஒளியையும் பெறுகிற காரணத்தால் அல்லாஹ் மீது சத்தியமாக!

அவர் இழப்பினை அடையவில்லை.

**குர்ஆன் வரிகள்**

அவர்கள் அல்லாஹ்விடம் திரும்பி, அவனிடம் பாவமன்னிப்புத் தேட வேண்டாமா? அல்லாஹ் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன். (அல்குர்ஆன் 5:74)

**4**

**மவ்லித் வரிகள்**

اَنِّيْ عُبَيْدٌ ذَلِيْلٌ مِنْ عَثْرَتِيْ اَسْتَقِيْلُ
وَمَا يَخِيْبُ النَّزِيْلُ فِيْ حَيِّ رَاعِ الذَّمَامِ

நிச்சயமாக நான் இழிவான ஒரு சிற்றடிமையாவேன். என் குற்றங்களிலிருந்து என்னை நீக்கிவிடக் கோருகிறேன். பொறுப்புகளைப் பேணுகிற பூமான் நபியின் குழுவில் இறங்கியவர் வீணாகி விடமாட்டார்.

**குர்ஆன் வரிகள்**

நான் உங்களுக்கு தீங்கு செய்யவும், நன்மை செய்யவும் அதிகாரம் பெற்றிருக்கவில்லை என்று (முஹம்மதே! நீர்) கூறுவீராக! (அல்குர்ஆன் 72:21) அல்லாஹ் சோதிக்க நாடுபவரை அல்லாஹ்விடமிருந்து காப்பாற்ற சிறிதும் நீர்

(முஹம்மதே!) அதிகாரம் பெறமாட்டீர். அவர்களின் உள்ளங்களை அல்லாஹ் தூய்மையாக்க விரும்பவில்லை. அவர்களுக்கு இவ்வுலகில் இழிவு இருக்கிறது. மறுமையில் கடும் வேதனை உண்டு. (அல்குர்ஆன் 5:41)

**5**

### மவ்லித் வரிகள்

**اَلشَّافِعُ الْمُنْقِذُ مِنْ مَهَالِكٍ وَآلِهِ وَصَحْبِهِ وَمَنْ هُدِيَ**

அழிவுகளிலிருந்து காப்பாற்றுகிறவரும் மன்றாடுகிறவருமான நபியவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தார், தோழர்கள் மற்றும் நேர்வழியாக்கப்பட்டவர்கள் மீதும் ஸலாவத்துச் சொல்லுங்கள்.

### குர்ஆன் வரிகள்

"மர்யமுடைய மகன் மஸீஹ் தான் அல்லாஹ்" என்று கூறியோர் (ஏக இறைவனை) மறுத்து விட்டனர். "மர்யமின் மகன் மஸீஹையும், அவரது தாயாரையும், பூமியில் உள்ள அனைவரையும் அல்லாஹ் அழிக்க நாடினால் அவனிடமிருந்து (அதைத் தடுக்க) சிறிதளவேனும் சக்தி பெற்றவர் யார்?" என்று (முஹம்மதே!) நீர் கேட்பீராக! வானங்கள், பூமி மற்றும் அவற்றுக்கு இடைப்பட்டவை களின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. அவன் நாடியதைப் படைப்பான். அல்லாஹ் அனைத்துப் பொருட்களின் மீதும் ஆற்றலுடையவன். (அல்குர்ஆன் 5:17)

**6**

### மவ்லித் வரிகள்

**صَلَوَاتُ اللهِ عَلَى الْمَهْدِيْ وَمُغِيْثُ النَّاسِ مِنَ الْوَهَجِ**

வழிகாட்டப்பட்டவரும் வாட்டும் நரக நெருப்பிலிருந்து மக்களைக் காப்பாற்றுவோருமான நபி(ஸல்) மீது அல்லாஹ்வின் ஸலவாத் உண்டாகுக.

### குர்ஆன் வரிகள்

“எங்கள் இறைவா! இவ்வுலகிலும் எங்களுக்கு நன்மையை வழங்குவாயாக! மறுமையிலும் நன்மையை (வழங்குவாயாக!) நரக வேதனையிலிருந்து எங்களைக் காப்பாயாக!” என்று கூறுவோரும் மனிதர்களில் உள்ளனர். (அல்குர்ஆன் 2:201) “எங்கள் இறைவா! நம்பிக்கை கொண்டோம். எனவே எங்கள் பாவங்களை மன்னிப்பாயாக! நரக வேதனையிலிருந்து எங்களைக் காப்பாயாக!” என்று அவர்கள் கூறுவார்கள். (அல்குர்ஆன் 3:16)

7

### மவ்லித் வரிகள்

إِنِّيْ إِذَا مَسَّنِّيْ ضَيْمٌ يُرَوِّعُنِيْ     اَقُوْلُ يَا سَيِّدَ السَّادَاتِ يَا سَنَدِيْ

எனை நடுங்கச் செய்துவிடும் ஏதேனும் பேரிடர்கள் எனைத் தீண்டும் வேளையிலே இன்னுதவி கேட்டவனாய் அனைத்துலகத் தலைவர்க்கெல்லாம் அருந்தலைவர் ஆனவரே! இணையில்லா என்னிணைப்பே! என்றுரைப்பேன் நிச்சயமாய்.

### குர்ஆன் வரிகள்

அல்லாஹ் உங்களுக்கு உதவி செய்தால் உங்களை வெல்வோர் எவருமில்லை. அவன் உங்களுக்கு உதவ மறுத்தால் அவனுக்குப் பின் உங்களுக்கு உதவி செய்பவன் யார்? நம்பிக்கை கொண்டோர் அல்லாஹ்வையே சார்ந்திருக்க வேண்டும். (அல்குர்ஆன் 3 : 160) “அல்லாஹ்விடம் உதவி தேடுங்கள்! பொறுமையாக இருங்கள்! பூமி அல்லாஹ்வுக்கே உரியது. தனது அடியார்களில் தான் நாடியோருக்கு அதை அவன் உரிமையாக்குவான். இறுதி முடிவு (இறைவனை) அஞ்சுவோர்க்கே சாதகமாக இருக்கும்” என்று மூஸா தமது சமுதாயத்திடம் கூறினார். (அல்குர்ஆன் 7 : 128)

**8**

### மவ்லித் வரிகள்

اَنْتَ حَقًّا غِيَاثُ الْخَلْقِ اَجْمَعِهِمْ

மெய்யாகப் படைப்புக்கெல்லாம் மெய்க்காவல் தாங்கள் தான்

### குர்ஆன் வரிகள்

வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது என்பதையும், அல்லாஹ்வையன்றி உங்களுக்குப் பாதுகாவலனோ, உதவுபவனோ இல்லை என்பதையும் நீர் அறியவில்லையா? (அல்குர்ஆன் 2:107)

**8**

### மவ்லித் வரிகள்

ضَاقَتْ بِيَ اْلاَسْبَابْ فَجِئْتُ هذَا الْبَابْ
أُقَبِّلُ اْلاَعْتَابْ اَبْغِيْ رِضَا اْلاَحْبَابْ
وَالسَّادَةُ اْلاَخْيَار

எனக்கு காரணங்கள்(உபாயங்கள்) நெருக்கடியாகிவிட்டன. எனவே நபியே! தங்களின் இந்த வாசலுக்கு நான் வந்து விட்டேன். தங்களின் வாசலின் இந்தப் படிகளை முத்தமிடுகிறேன். நேசர்கள் உடையவும், நல்லவர்களான தலைவர்கள் உடையவும், பொருத்தத்தை தேடுகிறேன்.

### குர்ஆன் வரிகள்

(நீங்கள் இணை கற்பித்தவை சிறந்தவையா? அல்லது) நெருக்கடியைச் சந்திப்பவன் பிரார்த்திக்கும் போது அதற்குப் பதிலளித்து துன்பத்தைப் போக்கி உங்களைப் பூமியில் வழித் தோன்றல்களாக ஆக்கியவனா? அல்லாஹ்வுடன் வேறு கடவுளா? குறைவாகவே சிந்திக்கிறீர்கள்! (அல்குர்ஆன் 27:62)

**9**

### மவ்லித் வரிகள்

فَرَوِّحُوْا رُوْحِيْ بِكَشْفِ الْكُرَبِ    عِنَايَةً مِنْ فَضْلِكُمْ مُعْتَمَدِيْ

எனவே என் கவலையை அகற்றுவதன் மூலமாக என் ஆன்மாவை நிம்மதியுறச் செய்வீராக. என்னால் பற்றி நிற்கப்படுவதற்குரிய நபியே தங்களின் அருட்கொடையிலிருந்து நான் நாடுகிறேன்.

### குர்ஆன் வரிகள்

“இதிலிருந்தும், மற்றும் ஒவ்வொரு துன்பத்திலிருந்தும் அல்லாஹ்வே உங்களைக் காப்பாற்றுகிறான். பின்னர் நீங்கள் இணை கற்பிக்கிறீர்கள்; என்றும் கூறுவீராக! (அல்குர்ஆன் 6:64)

நம்பிக்கை கொண்டோரின் உள்ளங்கள் அல்லாஹ்வின் நினைவால் அமைதியுறுகின்றன. கவனத்தில் கொள்க! அல்லாஹ்வின் நினைவால் தான் உள்ளங்கள் அமைதியுறுகின்றன.(அல்குர்ஆன் 13:28)

**10**

**மவ்லித் வரிகள்**

**قَدْ فُقْتُمُ الْخَلْقَ بِحُسْنِ الْخُلُق     فَأَنْجِدُوا الْمِسْكِيْنَ قَبْلَ الْغَرَق**

அழகிய நற்குணங்களின் மூலமாகத் தாங்கள் நிச்சயமாக படைப்பினங்களை விட மேம்பட்டு விட்டீர்கள். எனவே யான் கவலையில் மூழ்குவதற்கு முன்னரே இந்த ஏழையைக் காப்பாற்றுங்கள்.

**குர்ஆன் வரிகள்**

“அல்லாஹ்வையன்றி நீங்கள் கற்பனை செய்தோரைப் பிரார்த்தித்துப் பாருங்கள்! உங்களை விட்டும் கஷ்டத்தை நீக்கவோ மாற்றவோ அவர்களுக்கு இயலாது” என்று கூறுவீராக! (அல்குர்ஆன் 17:56)

**11**

**மவ்லித் வரிகள்**

**بَسَطْتُ كَفَّ فَاقَتِيْ وَالنَّدَمِ     اَرْجُوْ جَزِيْلَ فَضْلِكُمْ وَالْكَرَمِ**

என் வறுமை என் கைசேதம் ஆகிய கைகளை நான் விரித்துவிட்டேன். ஆகவே யான் தங்களின் மிகுதியான அருட்கொடை மற்றும் கொடைத்தன்மையை எதிர்பார்க்கிறேன்.

**குர்ஆன் வரிகள்**

“எனது துக்கத்தையும், கவலையையும் அல்லாஹ்விடமே முறையிடுகிறேன்.

நீங்கள் அறியாததை அல்லாஹ்விடமிருந்து அறிகிறேன்” என்று அவர் கூறினார். (அல்குர்ஆன் 12:86)

**நபி மொழி**

நீ கேட்டால் அல்லாஹ்விடமே கேள்! நீ உதவி தேடினால் அல்லாஹ்விடமே உதவி தேடு! என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (நூல் : திர்மிதீ 2440)

**12**

**மவ்லித் வரிகள்**

**وَانْظُرْ بِعَيْنِ الرِّضَالِيْ دَائِمًا اَبَدًا**

கருணைமிகும் மாநபியே! காலமெல்லாம் நித்தியமாய் திருப்தியெனும் விழிகளினால் தேம்புமெனைப் பார்த்தருள்வீர்.

**குர்ஆன் வரிகள்**

அல்லாஹ்வின் பொருத்தம் மிகப் பெரியது. இதுவே மகத்தான வெற்றி. (அல்குர்ஆன் 9:72)
அல்லாஹ்வைப் பற்றிய அச்சத்தின் மீதும், அவனது திருப்தியின் மீதும் தனது கட்டடத்தை நிர்மாணித்தவன் சிறந்தவனா? அல்லது அரிக்கப்பட்டு விழுந்து விடும் கட்டடத்தை கரை ஓரத்தில் கட்டி அதனுடன் நரகத்தில் சரிந்து விழுந்து விட்டவன் சிறந்தவனா? அநீதி இழைத்த கூட்டத்திற்கு அல்லாஹ் நேர் வழி காட்ட மாட்டான். (அல்குர்ஆன் 9 : 109)

**13**

**மவ்லித் வரிகள்**

**وَاعْطِفْ عَلَيَّ بِعَفْوٍ مِنْكَ يَشْمَلُنِيْ فَاِنَّنِيْ عَنْكَ يَا مَوْلَايَ لَمْ اَحِدِ**

என்னெஜமான் ஆனவரே, ஏற்றமிகு நுமைத்தவிர அன்னியரை நிச்சயமாய் அழையேனே! ஆதலினால் மன்னவரே! தங்களுயர் மன்னிக்கும் அரிய பண்பால் என்னிடத்தில் கழிவிரக்கம் என்றென்றும் காட்டிடுவீர்.

**குர்ஆன் வரிகள்**

அல்லாஹ்வைத் தவிர பாவங்களை மன்னிப்பவன் யார்? (அல்குர்ஆன் 3:135) உங்கள் இறைவனிடம் பாவமன்னிப்புத் தேடுங்கள்! பின்னர் அவனை நோக்கித் திரும்புங்கள்! என் இறைவன் நிகரற்ற அன்புடையோன்; அருள் நிறைந்தவன்"(என்றார்.) (அல்குர்ஆன் 11 : 90)

**14**

**மவ்லித் வரிகள்**

**إِنَّا نَسْتَجِيْرُ فِيْ دَفْعِ كُلِّ انْتِقَامِ**

நிச்சயமாக நாம் ஒவ்வொரு தண்டனையையும் தடுத்திடும் விஷயத்தில் இவர்களிடத்தில் பாதுகாப்புத் தேடுகிறோம்.

**குர்ஆன் வரிகள்**

தீமைகளைச் செய்தோரை அல்லாஹ்விடமிருந்து காப்பாற்ற யாரும் இருக்க மாட்டார்கள். ஒரு தீமைக்கு அது போன்றதே தண்டனை. அவர்களை இழிவும் சூழ்ந்து கொள்ளும். இருள் சூழ்ந்த இரவின் ஒரு பகுதியால் அவர்களின் முகங்கள் மூடப்பட்டது போல் இருக்கும். அவர்களே நரகவாசிகள். அதில் அவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள் (அல்குர்ஆன் 10 : 27) மவ்லித் வரிகள் நபியே! தங்களைக் கொண்டு யான் உதவி பெறுவதில் தங்களின் மீது சத்தியம் செய்கிறேன்.

**நபி மொழிகள்**

அல்லாஹ் அல்லாவதர்களைக் கொண்டு சத்தியம் செய்வர் இணைவைத்துவிட்டார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (நூல் : அபூதாவூத் 2829)

சத்தியம் செய்பவர் அல்லாஹ்வின் மீதே சத்தியம் செய்யட்டும்! இல்லையெனில் வாய்மூடி இருக்கட்டும்! என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (நூல் : புகாரீ 2679)

**15**

**மவ்லித் வரிகள்**

اَنْتَ سَتَّارُ الْمَسَاوِيْ     وَمُقِيْلُ الْعَثَرَاتِ

எம்மில் நிகழும் தீங்குகளை இதமாய் மறைப்பவர் தாங்களன்றோ, நிம்மதி குலைக்கும் இன்னல்களை நீக்கிவிடுபவர் தாங்களன்றோ.

اَلسَّلام عَلَيْكَ يَا مُبْرِى السَّقَام

நோய்களைக் குணமாக்குபவரே நும் மீது ஸலாம்.

يَا مَنْ يَّرُوْمُ النَّعِيْمَا     بِحُبِّهِ كُنْ مُقِيْمًا

وَلَوْ تَكُوْنُ سَقِيْمًا     لَدَيْهِ بُرْءُ السَّقَام

நயீம் எனும் சுவனத்தை நாடுபவனே! நபியவர்களின் நேசத்தைப் பற்றிக் கொண்டு தங்குபவனாக நீ இரு. நீ நோயாளியாக இருந்தால் நபி(ஸல்) அவர்களிடம் நோயின் நிவாரணம் இருக்கிறது.

**குர்ஆன் வரிகள்**

நான் நோயுறும் போது அவனே (அல்லாஹ்வே) எனக்கு நிவாரணம் தருகிறான். (அல்குர்ஆன் 26:80)

**நபி மொழி**

மனிதர்களைப் படைத்து பராமரிப்பவனே! நோயைப் போக்கி, அறவே நோய் இல்லாதவாறு குணமளிப்பாயாக! நீயே குணமளிப்பவன். உன் நிவாரணத்தைத் தவிர வேறு நிவாரணம் இல்லை என்று நபி (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள். (நூல் : புகாரீ 5675)

**16**

**மவ்லித் வரிகள்**

مُسْتَشْفِعًا نَزِيْلَ هذَا الْحَرَم     فَلَاحِظُوْنِيْ بِدَوَامِ الْمَدَدِ

மதீனாவெனும் இந்த மகத்தான பூமியில் இறங்கிய மாநபியே! தங்களின் பரிந்துரையைத் தேடியவனாக தங்கள் முன் நிற்கிறேன். எனவே, நிரந்தர நல்லுதவி செய்வதின் மூலமாக என்பால் கடைக்கண் பார்வையைச் செலுத்துவீர்களாக.

**குர்ஆன் வரிகள்**

“அல்லாஹ்வையன்றி பரிந்துரை செய்வோரை அவர்கள் கற்பனை செய்து கொண்டார்களா? அவர்கள் எந்தப் பொருளுக்கும் உடமையாளர்களாக இல்லாமலும், விளங்காதும் இருந்தாலுமா?” என்று கேட்பீராக! “பரிந்துரைகள் அனைத்தும் அல்லாஹ்வுக்கே” என்று கூறுவீராக! வானங்கள் மற்றும் பூமியின் அதிகாரம் அவனுக்கே உரியது! பின்னர் அவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள். (அல்குர்ஆன் 39:43,44) மிகைத்தவனும், ஞானமிக்கோனுமான அல்லாஹ்விடமிருந்தே தவிர எந்த உதவியும் இல்லை. (அல்குர்ஆன் 3:126)

**17**

**மவ்லித் வரிகள்**

**اَنْتَ مُنْجِيْنَا مِنَ الْحُرَق مِنْ لَهِيْبِ النَّار وَالاَجَج**
**ذَنْبُنَا مَاحِيْ لِيَمْنَعُنَا مِنْ ذُرُوْفِ الدَّمَع وَالْعَجَج**

நரக நெருப்பின் ஜவாலையினாலும் அதன் கடும் வெப்பத்தினாலும் கரிந்து போகாமல் எங்களை காப்பாற்றுவது தாங்களே ஆவீர்! எங்களின் பாவங்கள் அழிப்பவரே! தாங்கள் பாவங்களை அழிப்பது எங்களை கண்ணீர் வடிப்பதிலிருந்தும், கதறுவதிலிருந்தும் தடுத்துவிடும். நபியே! தங்களின் பரந்த மனப்பான்மையினால் கரிக்கும் நரக நெருப்பின் கொழுந்து விட்டெரியும் ஜவாலையை அணைத்து விடுங்கள். தங்களின் இரக்கத் தன்மையால் என் ஈரலின் வெப்பத்தைக் குளிரச் செய்யுங்கள்.

**குர்ஆன் வரிகள்**

யாருக்கு எதிராக வேதனை பற்றிய கட்டளை உறுதியாகி விட்டதோ அவனா? (சொர்க்கம் செல்வான்?). நரகத்தில் உள்ளவனை நீர் விடுவிப்பீரா? (அல்குர்ஆன் 39:19)

“எங்கள் இறைவா! நம்பிக்கை கொண்டோம். எனவே எங்கள் பாவங்களை மன்னிப்பாயாக! நரக வேதனையிலிருந்து எங்களைக் காப்பாயாக!” என்று அவர்கள் கூறுவார்கள். (அல்குர்ஆன் 3:16)